# திருப்புகழமிர்தம்




Acc.no 34331

ஆசிரியர்

## கிருபானந்தவாரி

கீலக — பங்குனி

வயலி நகரியி லருள் பெற மயில் மிசை
யுதவு பரிமள மதுகர வெகுவித
வனச மலரடி கனவிலு நனவிலு மறவேனே.

முருகா

# சந்தா நேயர்களுக்கு

எந்தை கந்தவேள் திருவருள் துணைகொண்டு நடந்துவரும் நமது "திருப்புகழமிர்த"த்துக்கு இந்தப் பங்குனிமாத இதழோடு முப்பத்திரண்டாவது ஆண்டு நிறைவடைகின்றது. வரும் கீலக ஆண்டு சித்திரை முதல் தொடங்கும் ஆண்டுக்குரிய சந்தாத் தொகையை 10-4-69க்குள் எமக்குச் சேருமாறு அனுப்பிவைப்பதுதான் நல்லது. அதற்குமேல் வரும் சந்தாதாரர்களுக்கு சித்திரை இதழ் வைகாசி இதழுடன் சேர்ந்துவரும்.

சந்தாத்தொகையை, மானேஜர், திருப்புகழமிர்தம் காரியாலயம் என்றே விலாசமிட்டு அனுப்ப வேண்டும். யார் பெயரையும் குறித்து அனுப்பக் கூடாது போஸ்டல் ஆர்டர், பாங்கு செக் இவைகள் மூலம் அனுப்பக் கூடாது.

வசதியுள்ள அன்பர்கள் மட்டும் பின்வரும் விலாசங்களில் தங்கள் சந்தாத் தொகையை 10-4-69 வரை நேரில் செலுத்தி ரசீது பெற்றுக் கொள்ளலாம். **அதற்குமேல் செலுத்துபவர்கள் நமது காரியாலயத்திற்கு அனுப்ப வேண்டும்.**

1. திரு. ஜெ. மு. சாமி, ஜவுளிக்கடை, 145, கீழ மாசி வீதி, மதுரை.
2. திரு. ரா. ப. சாமிக்கண்ணு பிள்ளை அவர்கள், செட்டி பேட்டைத் தெரு, உறையூர், திருச்சி-3.
3. திரு. ஆ. பொன்னுசாமி பிள்ளை, மரக்கடை, மேலப்புலிவார் ரோடு, திருச்சி-8.
4. திரு. வீ. சங்கரன் பிள்ளை, 66, சொக்கலிங்கம் சந்து. திருநெல்வேலி டவுன்.
5. திரு. D. வீரப்ப முதலியார், ஜோதிலக்ஷ்மி விலாஸ் 52, தெற்கு வீதி, சிதம்பரம்.
6. திரு. வே. கு. ராமசாமி முதலியார் சன்ஸ், மளிகை, லாங்கு பஜார். வேலூர், N. A.
7. திரு. வீ. திருஞானசம்பந்த முதலியார், 32-A, மண்டபத் தெரு, காஞ்சிபுரம்.
8. திரு. அரு. லெ. வெ. நடராஜன் செட்டியார், பாங்கர், ராஜவீதி, கோயம்புத்தூர்.
9. திரு. O. M. S. S. சங்கரலிங்க நாடார் சன்ஸ் & கோ, வியாபாரம், 371, மெயின் பஜார், விருதுநகர்.
10. Dr. R. L. ஹனுமந்தன், M.B., B.S., 8, தெற்கு மாசி வீதி, மதுரை.

**திருப்புகழமிர்தம் காரியாலயம்,**

**89, சிங்கண்ண செட்டித் தெரு,**

**சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2.**

உ

ஓம் குஹாய நம:



# திருப்புகழமிர்தம்

"திருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"

## மலர் 33

கீலக ஞு சித்திரை மீ முதல் பங்குனி மீ வரையில்
(1968 ஏப்ரல் மீ முதல் 1969 மார்ச்சு மீ வரையில்)



திருப்புகழ்த் தொண்டன்,

**கிருபானந்தவாரி**



**திருப்புகழமிர்தம் காரியாலயம்**
89, சிங்கண்ண செட்டித் தெரு,
சிந்தாதிரிப்பேட்டை, : : சென்னை - 2.

1969

*ALL RIGHTS RESERVED*

# திருப்புகழமிர்தம்

## பொருளடக்கம்

## திருப்புகழ்

(பதவுரை, பொழிப்புரை, விரிவுரை, கருத்துரையுடன்)

### திருவானைக்கா



### திருவருணை



### கற்பு—சிறு கதைகள்

## மகாபாரதம்—சாந்தி பருவம்

### அரச தருமம்



### ஆபத் தருமம்



### பிற கட்டுரைகள்

**Statement about ownership and other particulars about the newspaper "THIRUPPUGAL AMIRTHAM" Madras. as required to be published under Section 19D Sub-Section (b) of the Press and Registration of Books Act.**

(Form IV See Rule 8)

| | | |
|---|---|---|
| 1. | Place of publication | Madras |
| 2. | Periodicity of its publication : | Monthly |
| 3. | Printer's Name :<br>Nationality<br>Address : | K. M. John<br>Indian<br>8, Titarappa Mudali Street, Triplicane, Madras-5. |
| 4. | Publisher's Name :<br>Nationality :<br>Address : | Sri M. Madhusoodana Sivam<br>Indian<br>89, Singanna Chetti Street, Chintadripet, Madras-2. |
| 5. | Editor's Name :<br>Nationality :<br>Address : | Sri Kirupanandavari,<br>Indian<br>89, Singanna Chetti Street, Chintadripet, Madras-2. |
| 6. | Name and Address of individuals who own the newspaper and partners or shareholders holding more than one percent of the total capital. | M. Madhusoodana Sivam,<br>89, Singanna Chetti Street, Chintadripet, Madras-2 |

I, M. Madhusoodana Sivam, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

Dated :
15th March 1969

(Sd) M. MADHUSOODANA SIVAM
Publisher.

உ

ஓம் குஹாய நம :




# திருப்புகழமிர்தம்


All Rights Reserved

"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ரூள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"


| மலர் 33 | கீலக ஞு—பங்குனி மீ<br>மார்ச் 1969 | இதழ் 12 |
|---|---|---|


## திருப்புகழ்

### திருவருணை

பரியகைப் பாசம்விட் டெறியுமக் காலனுட்
பயனுயிர்ப் போயகப் படமோகப்
படியிலுற் ருரெனப் பலர்கள்பற் ருவடற்
படரெரிக் கூடுவிட் டலேநீரிற்

பிரியுமிப் பாதகப் பிறவியுற் றேமிகப்
பிணிகளுக் கேயிளைத் துழல்நாயேன்
பிழைபொறுத் தாயெனப் பழுதறுத் தாளெனப்
பிரியமுற் ருேதிடப் பெறுவேனே

கரியமெய்க் கோலமுற் றரியினற் ருமரைக்
கமைவபற் ருசையக் கழலோர்முன்
கலேவகுத் தோதிவெற் பதுதொளைத் தோனியற்
கடவுள்செச் சேவல்கைக் கொடியோனென்

றரியநற் பாடலேத் தெரியுமுற் ருேர்கிளைக்
கருணையிற் கோபுரத் துறைவோனே
அடவியிற் ருேகைபொற் றடமுலேக் காசையுற்
றயருமச் சேவகப் பெருமாளே.

## பதவுரை

கரிய மெய் கோலம் உற்ற அரியின் = உடல் கரிய நிறம்கொண்ட திருமாலின், நல் தாமரைக்கு அமைவ = நல்ல தாமரைக்கு ஒப்பான கண்ணையே, பற்று ஆசை கழலோர் முன் = மலராகக் கொள்வதற்கு ஆசை கொண்ட அந்தத் திருவடியையுடையவராம் சிவபெருமான் திருச்சந்நிதானத்தில், கலை வகுத்து ஓதி = கலைநூல் கருத்தை எடுத்து ஓதினவன்; வெற்புஅதுதொளைத்தோன் = கிரவுஞ்ச மலையைத்தொளை செய்தவன்; இயல் கடவுள் = தகுதி வாய்ந்த கடவுள்; சேவல் கை கொடியோன் என்று = சிவந்த சேவல் கொடியைக் கையில் கொண்டவன் என்று, அரிய நல் பாடலை = அருமையான நல்ல தமிழ்ப் பாடல்களை, தெரியும் உற்றோர் கிளைக்கு = தெரிந்து கூறி அடைவோர் கூட்டத்துக்கு அருள்பாலிக்க, அருணையில் கோபுரத்து உறைவோனே = திருவண்ணாமலையில் கோபுரத்தில் வீற்றிருப்பவரே! அடவியில் தோகை = கானகத்தில் வசித்த மயில் போன்ற வள்ளி பிராட்டியின், பொன் தட முலைக்கு ஆசை உற்று அயரும் = அழகிய பெரிய தனங்களின் மீது விருப்புற்று அயர்ச்சியடைந்த, அ சேவக = அந்த ஆற்றலுடைய, பெருமாளே = பெருமையிற் சிறந்தவரே! பரிய கை பாசம் விட்டு எறியும் = பருத்த கையிலுள்ள பாசக் கயிற்றை விட்டு வீசும், அ காலன் உள் = அந்தக் காலனிடத்தே, பயன் உயிர் போய் அகப்பட = பயன் தரும் இந்த உயிர்போய் அகப்பட்டுக் கொள்ள, மோகம் படியில் = ஆசைவைத்து இப்பூதலத்தில், உற்றார் என பலர்கள் = சுற்றத்தார் எனப்படும் பலரும், பற்றா = என் உடலை பற்றி, அடல்படர் எரி கூடுவிட்டு = வலிமையாகப் படர்ந்து எரியும்இந்த உடலை விட்டுப் போட்டு, அலைநீரில் பிரியும் = அலை வீசும் நீரில் குளித்து பாசத்தினின்றும் பிரிந்து போவார்கள். இ பாதக பிறவி உற்றே = பாவத்துக்கு உறைவிடமான இப்பிறவியையடைந்து, மிக பிணிகளுக்கே இளைத்து உழல் நாயேன் = மிகுந்த நோய்களால் இளைத்துத் திரிகின்ற அடியேனுடைய, பிழை பொறுத்தாய் என = பிழை பொறுத்தவனே என்றும், பழுது அறுத்து ஆள் என = என் குற்றங்களைக் களைந்து ஆண்டருள் என்றும், பிரியம் உற்று ஓதிட பெறுவேனோ = அன்புகொண்டு அடியேன் தேவரீரைப் புகழும் பேற்றைப் பெறுவேனோ ?

## பொழிப்புரை

கரிய திருமேனியுடைய திருமாலின் தாமரை மலர் போன்ற கண்ணை மலராகப் பெறுவதற்கு விரும்பிய திருவடியுடைய சிவபெருமான் திருமுன், கலை நூல் கருத்தை எடுத்து ஓதினவன்; கிரவுஞ்சமலையைத் தொளைத்தவன்; சிறந்த கடவுள், சிவந்த சேவற்கொடியைக் கையில் கொண்டவன்; என்று அருமையான தமிழ்ப்பாடல்களைத் தெரிந்து கூறி

அடைகின்ற அடியார் திருக்கூட்டத்துக்கு அருள்பாலிக்க, திருவண்ணுமலையில் கோபுரத்தில் எழுந்தருளியிருப்பவரே! கானகத்தில் வாழும் மயில் போன்ற வள்ளி பிராட்டியின், அழகிய பெரிய தனங்கள்மீது விருப்புற்று அயர்ந்த அச் சேவகப் பெருமிதமுடையவரே! பெரிய கைப் பாசக்கயிற்றை விடுத்து வீசும் அந்தக் காலனிடத்தே பயன் தரும் இந்த உயிர் அகப்பட்டுக்கொள்ள, இப்பூதலத்தில் ஆசை வைத் துள்ள சுற்றத்தார் பலரும் என் உடலைப்பற்றி, வலிமையாகப் படர்ந்து எரியும் தீயில் இந்த உடம்பை விட்டுவிட்டு, அலை வீசும் நீரில் முழுகி பாசத்தினின்றும் பிரிந்து போவார்கள். இத்தகைய பாவத்துக்கு இடமான இப்பிறவியை எடுத்து, மிகுந்த நோய்களால் இளைத்து, திரிகின்ற அடியேனுடைய பிழை பொறுத்தவனே! என்றும், "என் குற்றங்களைக் களைந்து ஆண்டருள்" என்றும் அன்பு கொண்டு தேவரீரை ஒதிப்புகழும் பெரும்பேற்றைப் பெறுவேனே?

## விரிவுரை

**பரிய கைப்பாசம் விட்டெறியுமக்காலன் :**

"காலன் என்பவன் இயமனுடைய அமைச்சன். அவனுடைய கை மிகவும் பருத்திருக்கும்.

அத்தகைய பருத்த கையில் உள்ள பாசக் கயிற்றை எடுத்து வீசி உயிரைப் பற்றுவான்.

**பயனுயிர் போயகப்பட :—**

இந்த உயிர் இயமனிடம் பயன்படுமாறு போய் அகப் பட்டுக் கொள்ளும்.

**மோகப்படியிலுற்றுரெனப் பலர்கள் பற்று :—**

இந்தவுலகில் என்பால் அன்பு வைத்திருந்த சுற்றத்தார் கள் மிகவும் வேதனைப்பட்டு என் உடம்பைப் பற்றிக்கொண்டு அழுவார்கள்.

**அடற்படரெரிக் கூடுவிட்டு :—**

அழுதபின் இந்த உடம்பை வலிமையாக மண்டி எரியும் தீயில் சேர்த்துவிடுவர்.

**அலை நீரில் பிரியும் :—**

சுட்டுச் சாம்பரான பின் சுற்றி நின்று, அழுத சுற்றத் தார்கள் குளிர்ந்த நீரில் குளித்து பாசம் கழன்று நத்தம் இருப்பிடம் நோக்கிப் போவார்கள்.

"நீரிற் படிந்து விடு பாசத்தகன்று,'

—(இத்தாரணி) திருப்புகழ்

"அலங்கா ரநன்றீ தென மூழ்கி
அகன் றுசையும் போய்"
—(பெருங்காரியம்) திருப்புகழ்.

**பாதகப் பிறவியுற்றே :—**

ஆன்மாக்கள் செய்த வினையினுல் இவ்வுடம்பு வருகின்றது. தீவினையால் நோய்வாய்ப்பட்ட வுடம்பு வருகின்றது.

**பிணிகளுக்கே யிளைத்துழல் நாயேன் :—**

ஒவ்வொரு நோயும் ஒவ்வொரு கன்மத்தினுல் வருகின்றது. "பல பிணிகளால் இளைத்துத் திரிகின்ற அடியேனுடைய பிழை பொறுத்தாள்" என்று சுவாமிகள் உருக்கமாக வேண்டுகின்றுர்.

**பிழை பொறுத்தாய் :—**

"அடியேன் செய்த பிழைகளைப் பொறுத்தவனே !"

**பழுதறுத் தாளென :—**

'அடியேனுடைய குற்றங்களைக் களைந்து ஆண்டருள்வாய்'' என்றும்,

**பிரியமுற்றுேதிடப்பெறுவேனே :—**

"முருகா! உன்னை அடியேன் அன்புடன் துதித்து உய்யும் பெரும் பேற்றைப் பெறுவேனே?

**கரியமெய்க் கோலமுற் றரியினற்றுமரைக்**
**கமைவ பற்றுசையக் கழலோர் :—**

இந்த அடி திருமால் கண்மலரைச் சாத்திய வரலாற்றைக் குறிக்கின்றது.

சலந்தரனை வதைத்த சக்கராயுதத்தைப் பெறும்பொருட்டு திழிவீழிமிழலையில் நாராயணர் தாமரைக் குளம் அமைத்து நாள்தோறும் ஆயிரம் மலர்களால் அர்ச்சித்து வந்தார். அவருடைய அன்பின் திறத்தை உலகுக்கு அறிவிக்கவேண்டி அரனுர் ஒருநாள் ஒரு மலரை மறைத்துவிட்டார்.

அக்குறையை நோக்கி, நிறைவு செய்யும் பொருட்டு, திருமால் தமது தாமரை போன்ற கண்ணை அகழ்ந்து அர்ச்சித்தார்.

**நீற்றினை நிறையப்பூசி நித்தல்ஆ யிரம்பூக் கொண்டு**
**ஏற்றுழி ஒருநாள் ஒன்று குறையக்கண் நிறைய விட்ட**
**ஆற்றலுக் காழிநல்கி அவன்கொணர்ந் திழிச்சுங்கோயில்**
**வீற்றிருந் தளிப்பர்வீழி மிழலையுள் விகிர்ந்தனுரே.** —அப்பர்.

**கலை வகுத்தோன் :—**

திருஞானசம்பந்தராக வந்து, சிவ சந்நிதியில் தேவாரப் பாடலைப் பாடியவர் என்றும், அல்லது கலைகளின் சாரமான மூலப் பொருளை உபதேசித்தவர் என்றும் பொருள்படும்.

**அரிய நற்பாடலைத் தெரியுமுற்றோர் கிளைக்கு :—**

சிறந்த செந்தமிழ்ப்பாடலைப் பாடித் துதித்து வரும் அடியார்களின் கூட்டத்துக்கு அருள்புரியும் பொருட்டு திருவண்ணுமலை திருக்கோபுர வாசலில் திருமுருகவேள் எழுந்தருளி யிருக்கின்றார்.

**அடவியிற்றோகை பொற்றடமுலைக் காசையுற்றயரும் :—**

வள்ளி யென்பது இன்பசக்தி. அச்சக்தியில் தோன்றும் அபரஞானம் பரஞானம் என்ற இருஞானங்களை முருகவேள் விரும்புகின்றார் என்பது இதன் கருத்து.

### கருத்துரை

அருணையில் மேவும் அண்ணலே உம்மை ஓதி உய்ய அருள் செய்யும்.

## திருப்புகழ்

தருணமணி வானி லத்தி லருணமணி யால விட்ட
தழலமளி மீதெ றிக்கு நிலவாலே
தலைமைதவி ராம னத்தி னிலைமையறி யாதெ திர்த்த
தறுகண்மத வேள்தொ டுத்த கணையாலே

வருணமட மாதர் கற்ற வசையின்மிகை பேச முற்று
மருவுமென தாவி சற்று மழியாதே
மகுடமணி வாரி சைக்கும் விகடமது லாவு சித்ர
மயிலின்மிசை யேறி நித்தம் வரவேணும்

கருணையக லாவி ழிச்சி களபமழி யாமு லைச்சி
கலவிதொலை யாம றத்தி மணவாளா
கடுவுடைய ராநி ரைத்த சடிலமுடி மீது வைத்த
கடியமல ராத ரித்த கழல்வீரா

அருணமணி யால மைத்த கிரணமணி சூழும் வெற்றி
அருணைநகர் கோபு ரத்தி லுறைவோனே
அசுரர்குலம் வேர றுத்து வடவனலை மீதே ழுப்பி
அமரர்சிறை மீளவிட்ட பெருமாளே.

## பதவுரை

கருணை அகலா விழிச்சி=கருணை நீங்காத கண்களையுடைய வரும், கலபம் அழியா முலைச்சி=சந்தனக் கலவை எப்போதும் விளங்கும் கொங்கைகளையுடையவரும், கலவி தொலையா மறத்தி= தேவரீடம் ஒரு போதும் பிரியாதுறைபவரும் ஆகிய வள்ளி பிராட்டி யாரது, மணவாளா=கணவரே! கடுஉடை அரா நிரைத்த=நஞ் சுடைய நாகங்களின் வரிசை கொண்ட சிவபெருமானுடைய, சடில முடி மீது வைத்த=சடை முடியின் மீது வைத்த, கடிய மலர் ஆதரித்த=வாசனை மலர்களையேற்றுக் கொண்ட கழல் வீரா=வீரக் கழலையணிந்த வீர மூர்த்தியே! அருண மணியால் அமைத்த=சிவந்த ரத்தினங்களில் அமைந்துள்ள ஒளி போல், கிரண மணி சூழும்=ஒளிக்கிரணங்கள் வீசும் சூரியன் வலம் வருகின்ற, வெற்றி=வெற்றி விளங்குவதான, அருணை நகர் கோபுரத்தில் உறைவோனே=திருவருணையம்பதியின் கோபுரத்தில் உறைபவரே! அசுரர்குலம் வேரறுத்து=அசுரர்களுடைய குலத்தை அடியுடன் அறுத்து, வடவனலை மீது எழுப்பி=வடவாக்கினி போன்ற தீயை அவர்கள் மீது செலுத்தி, அமரர் சிறை மீளவிட்ட= தேவர்களைச் சிறையினின்றும் விடுவித்துக் காத்தருளிய, பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே! தருணம்=சமயம் பார்த்து, மணி வாள்நிலத்தில்=ஒளிவீசுகின்ற விண்ணுலகில் நின்று, அருண மணி ஆலவிட்ட==மாணிக்கம்போலச் செந்நிறத்ததாய் ஒலித்து, தழல் அமளிமீது எறிக்கும் நிலவாலே=நெருப்பைப் படுக்கை மீது வீசுகின்ற நிலவாலும், தலைமை தவிரா மனத்தின்=தலைவனிடத்தி னின்றும் நீங்காத என் மனத்தின், நிலைமை அறியாது எதிர்த்த= நிலைமையை அறியாது எதிர்த்த=தறுகண் மதவேள் தொடுத்த கணையாலே=அஞ்சாத செருக்குள்ள மன்மதன் செலுத்திய கணை களாலும், வருண மடமாதர்=அறியாமை கொண்ட பலகுலத்துப் பெண்கள், கற்ற வசையின் மிசை பேசு=தெரிந்து பேசும் வசைச் சொற்களே மிகுதியாகப் பேசுவதாலும், முற்று மருவும் எனது ஆவி சற்றும் அழியாதே=முழுமையும் உமது விஷயத்தில் ஈடுபட்டு அழுந்தியுள்ள என்னுடைய ஆவி சிறிதேனும் அழியாமல், மகுடம் அணிவார் இசைக்கும்=மணிமகுடம் புனைந்த தேவர்கள் புகழ் கின்ற, விகடம் அது உலாவும்=அழகுடன் உலாவுகின்ற, சித்ர மயி லின் மிசை ஏறி நித்தம் வரவேணும்=அழகிய மயிலின் மீது ஏறி நாள்தோறும் வந்தருள வேணும்.

## பொழிப்புரை

கருணை நீங்காத கண்களையுடையவரும், சந்தனக் கலவை எப்போதும் விளங்கும் தனங்களை யுடையவரும், உம்முடன்

என்றும் பிரியாதவரும் ஆகிய வள்ளிபிராட்டியின் மணவாளரே! நஞ்சையுடைய நாகங்களின் வரிசையுடைய சிவபெருமானுடைய சடைமுடியின் மீதுள்ள நறுமலர் மாலைகளை ஏற்றுக்கொண்ட வீரக்கழலையுடையவரே! சிவந்த இரத்தின ஒளிபோல் கிரண ஒளி வீசும் சூரியன் வலம்வரும் வெற்றி விளங்கும் திருக்கோபுரத்தில் உறைபவரே! அசுரர்களின் குலத்தை வேரறுத்து, வடவாக்கினி போன்ற தீயை அவர்கள்மீது செலுத்தி; அமரர்களைச் சிறையினின்றும் மீட்டருளிய பெருமிதமுடையவரே! சமயம் பார்த்து ஒளிநிலவும் வானுலகில் மாணிக்கமணிபோல் ஒலியும் ஒளியுங்கொண்டு நெருப்பைப் படுக்கையின்மீது வீசுகின்ற நிலவாலும், தலைவனிடத்தும் தவிராத என் மனநிலைமையை யறியாது, என்னை எதிர்த்து அஞ்சாத தருக்குள்ள மன்மதன் செலுத்திய கணைகளாலும், அறியாமையுடைய பல குலத்துப் பெண்கள் பேசும் வசைச் சொற்களாலும், முழுவதும் ஈடுபட்டுள்ள என்னுடைய ஆவி அழியாமல், மணிமகுடம் அணிந்துள்ள தேவர்கள் புகழும், அழகாக உலாவும் அழகிய மயிலின்மீது ஏறி நாள்தோறும் வந்தருளவேண்டும்.

## விரிவுரை

இத்திருப்புகழ் அகப்பொருள் துறையில் அமைந்தது.

**தருணமணி வானிலத்தில் அருணமணி......மீதெறிக்கு நிலவாலே:—**

நாயகனைப் பிரிந்து நிற்கும் நாயகிக்கு குளிர்ந்த நிலா நெருப்பைப்போல் துன்புறுத்தும்.

தருணம் - சமயம் பார்த்து சந்திரன் விண்ணில் தோன்றி மாணிக்க மணிபோல் ஒலித்துக்கொண்டு படுக்கையின்மீது நெருப்பைச் சொரிவான்.

**தலைமை தவிரா மனத்தில் :—**

தலைவி தலைவனிடத்து என்றும் நீங்காத பற்றுடையவளா யிருக்கின்றாள்.

எங்கும் முருகனையே காண்கின்றாள். எங்கும் முருகன் நாமமே கேட்கின்றது. எல்லாம் முருக மயமாக விளங்குகின்றது.

**நிலைமை யறியாது எதிர்த்த :—**

இந்தத் தலைவியின் அதிதீவிர அன்பின் தகைமையை அறியாது மன்மதன் எதிர்க்கின்றான்.

**தறுகண் மதவேள் தொடுத்த கணையாலே :—**

தறுகண்—அஞ்சாமை

மதம் —செருக்கு.

அஞ்சாமையும் செருக்கும் உடைய மன்மதன் கரும்பு வில்லை வளைத்து மலர்க்கணைகளைச் சொரிந்து துன்புறுத்துகின்றான்.

**வருண மட மாதர் :—**

பல குலத்தினராகிய பெண்கள். அறியாமையுடன் கூடியவர்கள்.

**கற்ற வசையின் மிகைபேச :—**

பலகாலும் அப்பெண்கள் இப்படிப்பட்ட காலம் பார்த்துத் தாம் கற்றபடி என்மீது வசைமொழி கூறுகின்றார்கள்.

**முற்று மருவு மௌதாவி சற்று மழியாதே :—**

முற்றும்—முழுவதுமாக; மருவும்—ஈடுபட்டு அழுந்தியுள்ள என் உயிரானது சிறிதும் அழியாவண்ணம்.

**மகுடமணி வாரிசைக்கும் விகடம துலாவுசித்ர**
**மயிலின்மிசை யேறிநித்தம் வரவேணும் :—**

மகுடம் அணிகின்ற அமரர்கள் புகழ்கின்ற என்பது ஒரு பொருள்.

**மகுடமணி வார் இசைக்கும்...மயில் :—**

மகுடத்தில் ரத்தினத்தை வைத்துள்ள வாசுகி முதலிய நாகங்களைக் கயிறுபோல் காலில் எடுத்து உதறும் ஆற்றலுடைய மயில்.

''வாசுகி எடுத்துதறும் வாசி'' —திருவகுப்பு (வேளைக்காரன்)

**விகடமதுலாவு சித்ர :—**

தேவர்கள் புகழ விகட நடையிட்டு அழகாக உலாவுவது மயில்.

**கருணை யகலா விழிச்சி :—**

வள்ளி பிராட்டியாரது விழியின் பெருமையை இது எடுத்து விளக்குகின்றது. அம்பிகையின் கண்களில் சதா கருணை குடிகொண்டு விளங்கும்.

**கடுவுடையரா நிரைத்த சடிலமுடி மீதுவைத்த**
**கடியமல ராதரித்த கழல் வீரா :—**

பாம்பைச் சடையில் அணிந்த சிவபெருமானுடைய திருமுடியில் இருக்கும் மலர் முடிமாலை அப்பெருமான் முருகப் பெருமானிடம் உபதேசங் கேட்கும்போது திருமுடி சாய்த்த

# கற்பு

## சசிகலை

கோசல நாட்டின் தலைநகரம் அயோத்திமாநகரம். துருவஜித்து என்ற சிறந்த மன்னன் அங்கு அரசு புரிந்து வந்தான். ''அற நெறி வழங்குதல் வேந்தர்க்குக் கடனே'' என்றபடி மக்களை நல்வழிப் படுத்தி செம்மையுடன் செங்கோல் செலுத்தினன்.

அவனுக்கு இரு மனைவியர்கள்; மூத்தவள் மனோரமை. அவள் பட்டமகிஷி. இளையவள் லீலாவதி. மகப்பேறு கருதி நோன்புகள் பல நோற்றான். இளையவளாகிய லீலாவதி கருவுற்று ஒரு புதல்வனைப் பெற்றாள். சத்ருஜித் என்று பேர் சூட்டினார்கள்.

அம் மகன் பிறந்த முப்பதாம் நாளில் மூத்தவள் வயிற்றில் ஒரு மகன் பிறந்தான். சுதர்சனன் என்று பேர் சூட்டினார்கள்.

அந்த இரு புதல்வர்களில் சத்ருஜித்து அழகனாகவும், இனிமையாகப் பேச வல்லவனாகவும், இருந்தான். அவனிடம் குடிகளும் அமைச்சர்களும் அரசனுங்கூட அதிக அன்பு செலுத்தினார்கள். இரு புதல்வர்களும் இரு கண்களைப் போல் இனிது வளர்ந்தார்கள்.

### ஒரு அதிர்ச்சி

துருவஜித்து ஒரு நாள் வேட்டையாடச் சென்றான். சிறுத்தை யானை காட்டுப்பன்றி முதலிய கொடிய விலங்குகளைக் கொன்றான். இறுதியில் சிங்கம் புதரிலிருந்து பாய்ந்து வந்தது. அதனை அரசன்

---

ததனால் முருகன் அடிமீது வீழ்ந்தது. இது சிவபெருமான் செய்த திருவிளையாடலாகும்.

**வடவனலை மீதெழுப்பி :—**

1008 அண்டங்களிலிருந்தும் அசுரசேனைகள் ஆரவாரத்துடன் வந்தபோது, முருகவேள் சிரித்தார். அச்சிரிப்பில் தோன்றிய எரியால் அத்தனையும் சாம்பராயின.

''சங்கரித்த மலைமுற்றும்
சிரித்தெரி கொளுத்தும் கதிர்வேலா''

—(சினத்தவர்) திருப்புகழ்.

கருத்துரை

அருணை மேவும் ஐயனே! மயிலின்மீது வந்து என் தனிமையை இனிமையாக்கி யருள் செய்

அம்பால் அடித்தான். சிங்கம் அம்பின் அடியால் மிகுந்த சீற்றங் கொண்டு வாலை உயர்த்திப் பிடரி உரோமம் சிலிர்க்க அரசனை நோக்கி வந்தது. அரசன் வாளினுல் வெட்டினுன், வெட்டும்போது சிங்கம் அரசனை அடித்தது. சுந்தோபசுந்த நியாயப்படி அரசனும் மாய்ந்தான். சிங்கமும் மாய்ந்தது. இந்தச் செய்தியறிந்து எல்லோரும் ஆழ்ந்த துயரக் கடலில் மூழ்கினுர்கள்.

## பெரிய பிரச்சினை

எந்த மகனுக்கு முடிசூட்டுவது? என்ற பிரச்சினை எழுந்தது. "பட்டமகிஷியாகிய மனோரமையின் மகன் சுதர்சனன் தான் அரச முறைப்படி பட்டத்துக்கு உரியவன்" என்று பலரும் "வயதில் மூத்தவன் சத்துருஜித்து, ஆதலால் அவன்தான் பட்டத்துக்கு உரியவன்" என்று சிலரும் வாதம் புரிந்தார்கள். முடிவில் பட்டத்தரசியின் மகனுகிய சுதர்சனனுக்கு முடி சூட்டுவது என்று தீர்மானித்தார்கள்.

## போர் மூண்டது

இளையாளாகிய லீலாவதியின் தந்தை உஜ்ஜயினி மன்னன் யுதாஜித்து. இவன் சிறந்த பேராற்றல் படைத்தவன். தன் பேரனுக்கு முடிசூட்டவில்லையே யென்ற சீற்றத்துடன், நால்வகைச் சேனைகள் புடைசூழ அயோத்திக்கு வந்தான். மனோரமையின் தந்தையாகிய கலிங்கதேயத்து மன்னன் வீரசேனன் என்ற வேந்தன், தன் பேரனுக்கு முடிசூட்ட இருப்பதையறிந்து மகிழ்ச்சியுடன் வந்து சேர்ந்தான்.

"மூத்தவன் இருக்க இளையவனுக்கு எப்படி முடிசூட்டலாம்?" என்றுன் யுதாஜித்து.

"பட்ட மகிஷியின் மகன் சுதர்சனன். அவனிருக்கும்போது மற்றவனுக்கு ஏது பட்டம்?" என்று வாதிட்டான் வீரசேனன்.

வாதம் வலுத்தது; ஓயவில்லை. முடிவில் யுதாஜித்துக்கும் வீரசேனனுக்கும் போர் மூண்டது. போரில் யுதாஜித்தினுல் வீரசேனன் மாண்டான்.

## மனோரமையின் மனத்துயர்

மனோரமை பெருந் துன்பக்கடலில் அழுந்தினுள். கணவனையும் தந்தையையும் இழந்தாள். தன் மைந்தனையும் கொன்று விடுவார்களோ?" என்று கதிகலங்கினுள்; மதிமயங்கினுள்,

"தெய்வமே! நான் பட்டத்தரசியாக இருந்தும், உயர்ந்த அறிவுள்ள மகனைப் பெற்றும், இப்போது சிறகிழந்த பறவையாகிப் பரிதவிக்கின்றேன். லீலாவதியின் தந்தையாகிய யுதாஜித்து பொல்லாதவனுயிற்றே? என் இளம் புதல்வனை எப்படிக் காப்பாற்றுவேன்? என் மகனுக்கு முடிசூட்ட நினைத்தவர்களும், இனி வலிமை

யுள்ள பக்கம் தானே சேர்வார்கள். கடவுளே! என்னைக் காப்பது நின் கடன்'' என்று இறைவனிடம் முறையிட்டாள்.

நம்பிக்கையுள்ள ஒரு அமைச்சனை யழைத்து "இந்த இக்கட்டான நிலையில் நான் எப்படி வாழ்வேன்'' என்றாள். அமைச்சன் "தாயே! இனி தாங்கள் மகனுடன் இங்கிருப்பது பேராபத்தாகும். பாம்புகளின் நடுவில் எலி எப்படி வாழமுடியும்? எங்காவது தக்க இடத்தில் தலைமறைவாக இருந்து வாழ்வதுதான் உசிதம். தெய்வத் திருவருளால் மீளவும் தாங்கள் இங்கு வாழலாம். காசிமாநகரில் என் மாமன் சுபாகு என்ற மன்னன் தங்கட்கு உதவி செய்வான்'' என்று கூறினான்.

மனோரமை தன் அருமந்த மகன் சுதர்சனனுடன் ஒருவரும் அறியாமல் அரண்மனையை விட்டு வெளியேறினாள். போர்க்களத்தில் மாண்டு கிடக்கும் தன் தந்தையாகிய வீரசேனனுடைய உடம்பைக் கண்டு...கோ என்று கதறிப் பதறியழுதாள். "பிதாவே! பேரன் பொருட்டு தங்கள் வாழ்வு முடிவு பெற்றது. நாங்கள் அநாதைகளாகிவிட்டோம். பகைக்குப் பயந்து வெளியேறிப் போகின்றோம். தங்கள் ஆன்மா சாந்தியடைவதாக!' என்று புலம்பிக் காட்டை நோக்கிச் சென்றாள். "பட்ட காலிலேயே படும், கெட்ட குடியே கெடும் என்றபடி வழியில் கள்வர்கள் வழிமறித்து, அவளும் அரசகுமாரனும் அணிந்திருந்த அணிகலன்களைக் கவர்ந்து சென்றார்கள். உயிர்தப்பியதேபோதும் என்று ஆறுதல்கொண்டு. கொடிய விலங்குகள் வாழும் கடிய கானகத்தைக் கடந்தாள். கங்கையைக் கண்டாள். கங்கையில் சங்கடந்தீர ஆடினாள். கங்கைக் கரையில் உள்ள பரத்துவாஜருடைய ஆச்சிரமத்தைக் கண்டாள். அவருடைய பாதமலர் மீது வீழ்ந்து தன் குறைகள் அனைத்துங்கூறி அழுது அடைக்கலம் புகுந்தாள்.

பரத்துவாஜர் "அம்மா! அழாதே. எல்லாம் விதி செய்யும் விளையாட்டு. இனி நீ கவலைப்படாதே, என்னுடைய அடைக்கலமாக இங்கு வாழும் உன்னை அந்தகனும் அணுகமாட்டான். மகனுடன் மகிழ்ச்சியாக இரு'' என்று ஆறுதல் கூறினார். சுதர்சனன் அவரிடம் சகல கலைகளையுங் கற்று வல்லவனானான். அவரிடம் உபதேசம் பெற்று தேவியை உபாசனை செய்து வந்தான்.

மகனுடன் மனோரமை மறைந்து விட்டதை யறிந்து யுதாஜித்து ஏமாற்றமடைந்தான். தன் பேரனாகிய சத்ருஜித்து என்பானுக்கு முடிசூட்டினான். முடிசூட்டு விழா அயோத்தியில் கோலாகலமாக நடைபெற்றது. லீலாவதி தன் மகன் மன்னவனானது பற்றி மனம் மகிழ்ந்தாள். அயோத்திவாழ் மக்கள் "பட்டமகிஷியாகிய மனோரமை தன் மகனுடன் எங்கு சென்றாளோ? கொல்லப்பட்டார்களோ'' என்று எண்ணி இரங்கினார்கள்.

யுதாஜித்து தன் நகரமாகிய உஜ்ஜயினிபோய்ச் சேர்ந்தான். மனோரமையும் அவள் மகனும் எங்கே ஒளிந்திருக்கின்றார்கள்? அவர்களைத் தேடிக் கொல்ல வேண்டும் என்று திட்டம் இட்டான். ஒற்றர்களைத் தேடிக் கண்டு பிடிக்குமாறு ஏவினான்.

பரத்துவாஜருடைய தவச்சாலையில் இருப்பதாக ஒற்றர்கள் மூலம் அறிந்தான். வெகுண்டு ஆலகால விஷம் போல் கொதித்து எழுந்தான். பெரும்படையுடன் புறப்பட்டான். சித்திரகூட பர்வதத்தை யடைந்தான்.

இதை யறிந்த மனோரமை புலிகளைக் கண்ட இளம் மான் போல் நடுங்கினாள். மகனுடன் முனிவர் பெருமான் மலரடியில் வீழ்ந்து அழுதாள். தபோதனர். "தாயோ! நீ தளர்தல் வேண்டாம். என் அருகில் இருக்கும் உன்னை யாராலும் இடர்ப்படுத்த முடியாது. நெருப்பின் அருகே பனி வராது, ஒரு புறம் நீ மகனுடன் மறைவாக இரு" என்றார்.

பரத்துவாஜருடைய பெருமையை உணர்ந்தவனாகிய யுதாஜித்து, சேனைகளை ஒரு புறம் நிறுத்திவிட்டு ஆச்சிரமத்தில் சென்று அவரைப் பணிந்தான். "முனிவர் பெருமானே! என் பகைவர்கள் இங்கிருப்பதாக அறிகின்றேன், அவர்களைக் கொல்லப் போகின்றேன். தாங்கள் இந்த விஷயத்தில் தலையிடக்கூடாது" என்றான்.

பரத்துவாஜர் "பார்த்திபனே! உன் பகைவர் ஒருவருமில்லை. மனோரமை என் அடைக்கலப்பொருள். என் அடைக்கலப் பொருளை அழிக்க உனக்கு உரிமை கிடையாது. ஆதலால் நீ வந்த வழியே க்ஷேமமாகத் திரும்பிப் போய்வா" என்று கூறினார்.

யுதாஜித்து "தவ முனிவரே! தாங்கள் அரசியலில் தலையிடுவது நன்றன்று. தாங்கள் தவமே பொருளாகக்கொண்டு வாழ்பவர். சாதுக்களாகிய நீர் வீணே அரசியலில் நுழையக்கூடாது. முட்செடியை முளையிலே களைய வேண்டும். சிறு நெருப்பேயாயினும் அதை நீர் விட்டு அவிப்பது அறிவுடைமை. ஆதலால் என்பகையை நான் அழிக்கவேண்டும். மனோரமையையும் அவள் மகனையும் நான் அழித்தே தீருவேன்" என்று சீற்றத்துடன் கர்ஜித்தான்.

முனிவர் "வேந்தனே! இது அரசியல் அன்று, அறத்தியல். உன் ஆட்சி உன்தேயத்தில்தான் செல்லும். நாங்கள் யார்க்கும் குடிகளல்லர். இங்கே வீண் வார்த்தைகளைப் பேசவேண்டாம். உன்னையும் உன் படைகளையும் ஒரு துரும்பினால் அழிக்கும் ஆற்றல் தவ முனிவர்களாகிய எங்களுக்கு உண்டு, அபலையான ஒரு பெண்மணியையும், பருவமடையாத இளம் பாலகனையும் கொல்லுவதா அரசியல்? மூடனே! ஒரு வார்த்தையால் உன்னைக் கற்சிலையாகச் செய்துவிடுவேன். அகந்தையால் அழிந்துவிடாதே. இந்திராதி இமையவரும் இருடிகளுக்கு அடிபணிவார்கள். நீ எம்மாத்திரம்? விளக்கில் வீழும்

விட்டில் பூச்சியைப் போல் அழிந்து போகாதே. ஆயுதமில்லாதவர்களையும் பெண்ணையும் குழந்தையையும் கொல்லுவது அரசியலாகாது. ஆகவே இனி இங்கு கண நேரமும் தங்காது போய்விடு'' என்ருர்.

யுதாஜித்துவின் முதலமைச்சர், ''வேந்தர் பெருமானே! நாம் தவ முனிவரை எதிர்ப்பது நன்றன்று. பரத்துவாஜர் சிறந்த தபோதனர். இவருடைய கோபக்கினி பதினன்கு உலகங்களையும் பஸ்மீகரிக்கும். ஆகவே இவரை அஞ்சலி செய்து இவருடைய ஆசி பெற்றுத் திரும்புவதே மதியுடைமை'' என்ருன். யுதாஜித்து அணைக்கு அடங்கிய நதிபோல் அடங்கி அடிகளை வணங்கிப் படையுடன் திரும்பித் தன் நகரம் போய்ச்சேர்ந்தான்.

சுதர்சனன் முனி புதல்வர்களுடன் இனிது வளர்ந்து வில் வாள் முதலிய சகல கலைகளிலும் வல்லவனாக விளங்கினன். தன் தாய்க்கு வேண்டிய பணிவிடைகள் அத்தனையும் புரிவான். தேவியின் திருமந்திரத்தை இடையருது ஜெபித்தான். அதனல் தேவியின் திருவருளுக்கு உரியவன் ஆனன்.

ஒரு சமயம் அம்பிகை அழகிய ஒளியுருவுடன் தோன்றிக் காட்சியளித்து அருள்புரிந்தாள். அம்பிகையின் அருளும் ஆற்றலும் அறிவும் அடக்கமும் ஆண்மையும் ஒருங்கே படைத்து கட்டிளங் காளையாக விளங்கினன். மகனுடைய ஏற்றத்தையும் தோற்றத்தையும் பார்த்துப் பார்த்து, மெலிந்த உடல் பூரித்தாள் மனேரமை. தனிமையில் தன் மகனுடைய அவலநிலையை நினைத்துக்கண்ணீர் விட்டு அழுவாள். தங்கள் அரசைப் பிறர் ஆள, ஆச்சிரமத்தில் அநாதையாக என் மகன் இருக்கின்ருனே. என் புத்திர சிகாமணி அரியாசனத்தமர்ந்து அரசு புரியும் மாட்சிமிகுந்த காட்சியைக் காணும் நாள் என்று வருமோ? வராதோ? தேவியின் திருவருள் எவ்வாருே?'' என்றெல்லாம் எண்ணி எண்ணி விம்முவாள். பெருகி வழியும் கண்ணீரால் தரையில் கோலம் போடுவாள்.

காசி மன்னன் சுபாகு அறநெறி வழுவாது அரசுபுரிந்துவந்தான். அவனுடைய மாதவத்தால் பிறந்த மணிவிளக்கு சசிகலை. அவள் இனிது வளர்ந்து கலை நலம் பெற்று மானுடவுருவெடுத்த மகாலட்சுமியைப்போல் விளங்கினள். கல்லும் புல்லும் உருகுமாறு அவள் வீணகானம் புரிவாள். பெண் குலத்துக்கே அவள் பெருமை தந்து கொண்டிருந்தாள். சுபாகு தன் புதல்விக்கேற்ற வரனை நாடிக் கொண்டிருந்தான்.

சசிகலை தன் தோழிகளுடன் நட்சத்திரங்கள் சூழச் செல்லும் முழுமதி போல் ஒரு நாள் நந்தன வனத்தை யடைந்தாள். அங்கு மலர் எடுத்தும், தொடுத்தும், சூடியும் பாடியும் ஆடியும் உல்லாச

மாகப் பொழுது போக்கினுள். அங்கு யாத்ரீகரான ஒரு தவசி தற்செயலாக வந்தார். சசிகலே அவரை வணங்கி வழிபட்டாள்.

''சுவாமி! தாங்கள் எங்கிருந்து வருகின்றீர்கள்? எங்கு போகின் றீர்கள்?' என்று வினவினுள்.

''அம்மா! வாழி: நான் சித்திரகூடமலேயில் வாழ்பவன். தீர்த்த யாத்திரை செய்து வருகின்றேன். உன் இனிய கீதங்களேக் கேட்டு உள்ளம் உருகினேன். இது போன்ற இன்னிசையை முன் ஒரு சமயம் பரத்துவாஜருடைய சீடனும், ஆயிரம் மன்மதனுக்கு நிகரான வனும், சிறந்த கலா விநோதனுமாகிய சுதர்சனனிடம் கேட்டேன். அந்த அயோத்தி ராஜகுமாரன் அளவற்ற ஆற்றல் படைத்தவன். அவன் மலர்க்கரம் பட்டால் பட்டமரங்கள் தளிர்க்கும். சமான மில்லாத பெருமைகளேயுடையவன். அவனேக் கணவனுக நத்தப் பெண்மணியடைகின்ருளோ அவளே அருந்தவஞ் செய்த பாக்கிய சாலி. குழந்தாய்! அகன்ற மார்பும் உயர்ந்த தோளும், விசாலமான நெற்றியும் சிங்கம் போன்ற வீரநடையும், மேகம் போன்றகொடை யும் படைத்தவன் அப் பெருமகன். அவனுக்கு நிகர் அவனேதான். அவனேக் கண்டால் ஆண் மனமே காதல் கடலில் முழுகும் என்ருல் பெண்மனத்தைப்பற்றிப் பேசுவானேன். பொன் மேருகிரி போன்ற கெம்பீர வீர குமாரன். அவனுடைய கீர்த்தியும் சீர்த்தியும் சொற்களால் சொல்லிப் பூர்த்தி செய்ய முடியாதவை. அத்திரு வாளன் பேர் சுதர்சனன். மேலான காட்சியுடையவன் என்பது அதன் பொருள். எதிர்காலத்தில் அந்த சுந்தரன் உலகமுழு வதும் ஒரு குடையின் கீழ் ஆளப்போகின்ருன்'' என்றெல்லாம் இனிது கூறிவிட்டு அத் தவசி தன் யாத்திரையைத் தொடங்கிச் சென்ருர்.

அந்தச் சொற்கள் சசிகலேயின் செவி வழி சென்று இன்ப மின் சாரம் உடம்பில் பாய்ந்தது போன்ற உணர்ச்சி வசப்பட்டாள். அவ ளுடைய மனக் கண் முன் சுதர்சனன் காட்சியளித்தான். காதல் வெள்ளத்தில் விழுந்து கரைகாணுது தத்தளித்தாள். உண்பதில்லே. உறங்குவதில்லே. ஒருவருடனும் உரையாடுவதில்லே. ஏதோ திசை மயங்கியவள் போல் திகைத்தாள். ஊமன் உயர்ந்த கனுக் காண்பா னுயின், அதனேச் சொல்லமாட்டாது தவிப்பது போல், சசிகலே தன் காதல் நோயை யாரிடமும் கூறமுடியாது குமுறினுள். தேவியை வேண்டினுள்.

செல்வப் புதல்வியின் மாறுபாட்டைக் கண்ட தாய் தந்தையர் சிந்தனே செய்தார்கள். திருமணம் புரிந்தால் இத்திகைப்பு நீங்கும் என்று தீர்மானித்தார்கள். சுயம்வரம் அமைத்தார்கள். சுயம்வர மண்டபத்தை அலங்கரித்தார்கள். சுபாகு ஒற்றர்கள் மூலம் சுதர் சனனுடைய பெருமைகளேக் கேட்டிருந்தான். சுயம்வர ஓலேகள்

நாடெங்கணும் சென்றன. வண்டுகள் தேன் மலரை நாடி வருவது போல் அங்கம் வங்கம் சிங்கம் கலிங்கம் மச்சம் மராடம் மத்திரம் முதலிய நாட்டுமன்னர்கள் காசிமாநகரில் கூடினர்கள்.

சசிகலை தனக்குள் சிந்தித்தாள். மன்னர்கள் முன்கூட்டியே வந்து குழுமியிருக்கின்றார்கள். நான் மனத்தால் வரித்தஉத்தமருக்கு சுயம்வர அழைப்பு போயிருக்காது. அவர் காட்டில் உறைகின்றார். நம்பிக்கையுள்ள ஒருவன் மூலம் நாமே அழைப்பு அனுப்புவோம்'' என்று கருதி, உத்தம குணம் பொருந்திய ஒரு அந்தணரிடம் சுயம் வர ஓலையை அனுப்பினள்.

அந்த அந்தணன் சித்திரகூட மலைக்கு வந்து தனிமையில் சுதர் சனனைச் சந்தித்தான். அவனுடைய அழகைக் கண்டு விம்மிதம் அடைந்தான். ஓலையை நீட்டினன்.

''மாண்புமிக்க மன்னர் பெரும !

தங்கள் பெரும்புகழைக் கேட்டு தங்கள் திருவடிகட்கு அடிமை பூண்டுவிட்டேன். எனக்கு சுயம்வரம் நிகழ்கின்றது. என்னையும் யான் சூட்டும் மாலையையும் ஏற்றுக்கொள்ள எழுந்தருள வேண்டும்.

தங்கள் அன்பை நாடும்,

காசிராஜ குமாரி

சசிகலை.''

அந்த ஓலையைப் படித்த சுதர்சனன் அதிசயம் அடைந்தான். ''காட்டில் வேடனைப்போல் வாழ்கின்ற என்னையுங் காதலிக்கின்ற ஒரு அரசகுமாரி யிருக்கின்றாளோ ? இதுவும் இறைவன் செய்யும் திருவிளையாடல் போலும்'' என்று கருதினன். அந்த வோலையைக் காட்டித் தன் ஆசிரியராகிய பாரத்துவாஜருடைய அநுமதியை நாடி நின்றான்.

பாரத்துவாஜர் ''மகனே! காசிராஜன் சுபாகு உத்தம குணம் பொருந்தியவன். அவனுடைய தவப் புதல்வி சசிகலை பெண்ணமுதம் போன்றவள். அவள் தேவி உபாசனையுடையவள். அவள் உன்னை விரும்புவது எதிர்கால வாழ்வுக்கு ஏற்றது. போய் வா என்று கூறி தேவியின் திருமந்திரத்தைக்கூறி ஆசீர்வாதம் செய்தார்.

மனோரமை ''மகனே! சுயம்வரத்தில் பல அரசர்கள் கூடுவார் கள். நமது பகைவரும் வரக்கூடும். தனியே உன்னை அனுப்ப என் மனம் அஞ்சுகின்றது. தேவியின் திருவருள் உனக்குத் துணை செய்யும். நானும் வருகிறேன்'' என்றாள்.

சுதர்சனன் தாயுடன் புறப்பட்டுக் காசிமாநகரம் சென்றான். வந்தவர்களை யெல்லாம் சுபாகு வரவேற்றனன், சுதர்சனனும் தாயுடன் ஒரு விடுதியில் தங்கினன். இவனுடைய வரவை யறிந்த

சசிகலே பெருமகிழ்ச்சியடைந்தாள். சந்திரனே விரும்பும் சகோரப் பறவையைப் போல் உள்ளங் குளிர்ந்தாள்.

யுதாஜித்தும் தன் பேரனுடன் வந்திருந்தான். சுதர்சனன் வந்திருப்பதை யறிந்து சினத் தீயை மூட்டினன். காட்டில் வாழும் மூடனுக்குச் சுயம்வரமா? அவனுக்கு வெட்கம் இல்லேயா? முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்படலாமா? அவனே இப்போதே அடித்து விரட்டுவேன்'' என்ருன்.

கேரளநாட்டு மன்னன் ''யுதாஜித்தே! நீர் கூறுவது அரச நெறி யாகாது. இது இச்சாசுயம்வரம். இதில் எல்லோரும் கலந்துகொள் ளும் உரிமையுண்டு. சுதர்சனன் அரசகுமாரன். வீராதிவீரன். சுயம் வர விழாவில் வீண் கலகம் புரிவது நீதியன்று. உண்மையில் அயோத்திக்கு அவன்தான் மன்னனுக வேண்டும். அவனே நீ அநியாய மாகத் துரத்திவிட்டு உன் பேரனுக்குப் பட்டங்கட்டியதே பிழை. நீ இங்கும் அரசநெறிக்கு மாருக நடப்பாயானுல் அரசர்கள் உன்னே சும்மா விட மாட்டார்கள்'' என்று கூறி மறுத்துரை கூறினன், இதனேக் கேட்டு யுதாஜித்து சிறிது அஞ்சினன்.

குறித்த நாளில் சுயம்வர மண்டபத்தில் அரசர்கள் சிறந்த ஆசனங்களில் அமர்ந்திருந்தார்கள். சுதர்சனன் இந்திரகுமாரன் ஜயந்தனேப் போல் இடையில் ஒளி செய்துகொண்டு அமர்ந்திருந் தான். அவனுடைய திருமேனிப் பொலிவையும், வீரதீரப் பிரதா பத்தையும் பார்த்து யுதாஜித்தும், அவனுடைய பேரன் சத்துருஜித் தும், நாகப்பாம்புகளேப் போல் பெருமூச்சுவிட்டுப் பொங்கினர்கள். சுதர்சனனுடைய திருமுகத்தில் தேவியின் திருவருள் 'விலாசம் திகழ்ந்தது.

இந்திராணியைப் போல் சசிகலே மலர்மாலே யேந்திய வண்ணம் சேடியர் புடைசூழச் சுயம்வர மண்டபத்தில் தோன்றினுள். அவ ளுடைய எழில் நலத்தைக் கண்டு மன்னர்கள் மெய்மறந்துவிட்டார் கள். ''இவளே மனேவியாக அடையும் பெரும்பேறு யாருக்குக் கிட்டுமோ'' என்று கருதினர்கள். சில அரசர்கள் மீசையைச் சரி செய்து கொண்டார்கள். சிலர் மேலாடையை ஒழுங்கு செய்து கொண்டார்கள். உலர்ந்த உதட்டை நாவினுல் ஈரஞ் செய்து கொண்டார்கள். கண்ணே இமைக்காமல் அவளேயே பார்த்துக் கொண்டு சித்திரப்பதுமைகள் போல் அசைவற்று அமர்ந்திருந் தார்கள்.

அரசர்களின் பேர் ஊர் குணம் குறை இவைகளே சசிகலேயின் செவியில் மட்டும் விழுமாறு தாதியர் கூறினர். கதிரவனேக்கண்டு கமலம் மலர்வதுபோல் சுதர்சனனேக் கண்டு முகமும் அகமும் மலர்ந்த சசிகலே அவனுடைய கந்தரத்தில் மலர்மாலே சூட்டினுள்.

சுதர்சனன் சசிகலையின் வலக்கரத்தைப் பற்றிக்கொண்டு தேரேறினன்.

யுதாஜித்து "அரசர்களே! நீங்கள் என்ன கோழைகளா? அரசகுலத்துக்கே இது அவமானம். நம்மை யெல்லாம் அவமதித்து, காட்டிலே வசிக்கும் அநாதைக்கு அரசகுமாரி மாலையிட்டது நியாயமா? இதை நாம் விட்டு வைக்கக் கூடாது. எழுங்கள். இவனை வளைத்துப் பிடியுங்கள், அடியுங்கள், கையை ஒடியுங்கள்" என்று மன்னரைத் தூண்டினன். பொறுமையுடைய சில அரசர்கள் அவனுடைய புல்லுரைகளைக் கேட்டுப் பொங்கியெழுந்தார்கள். போர் மூண்டது. சுபாகு மன்னன் அஞ்சினன். அரசர்கள் பலர் சேர்ந்து தன் மருமகனைக் கொன்றுவிடுவார்களே என்று நடுங்கினன். தன் சேனைகளுடன் சுபாகு மன்னன் மருகனுக்குத் துணையாக வந்தான்.

"மாமா! நீங்கள் அஞ்சவேண்டாம். அம்பிகையின் அருளும், என் குருநாதருடைய ஆசியும், என் வில்லும் துணை செய்யும். இந்த எள்ளுப்பதர்களை பறக்கடிப்பேன் என்று கூறி அரசசிம்மம் போல் தேரேறி வில்லுடன் முன்னணியில் நின்றான். தேவியைத் தியானித்தான். உடனே ஒரு பெண் தோன்றினள். அவள் முன் ஒரு சிங்கந் தோன்றியது. ஒளிவடிவாய அப்பெண்மணி சிங்கத்தின் மீது ஆரோகணித்தாள்.

சத்ருஜித்து, தன் பாட்டனரைப் பார்த்து, "தாதா! இவன் அந்தக் கிழ முனிவனிடம் ஏதோ மாயாசால வித்தைகளைக் கற்றிருக்கின்றான் போலும். இது கண்கட்டு வித்தை. இவனை உடனே கொல்ல வேண்டும்" என்று கூறி அம்பு மழை பொழிந்தான். எத்தனை அரசர்கள் எதிர்த்தார்களோ அத்தனை அரசர்கள் முன்னும் ஒவ்வொரு சிங்கத்தில் ஒரு வீரமடந்தை நின்று போர் புரிந்தாள். அரசர்கள் விடுகின்ற அம்புமழைகளைப் பனிபோல் அகற்றினள். சூறுவளிக் காற்றுபோல் சுழன்றாள். அவள் விடுகின்ற அம்புகளினல் யானைகளும் தேர்களும் குதிரைகளும் காலாட்படைகளும் சாய்ந்து மாய்ந்தன. திரிசூலத்தால் யுதாஜித்தையும் சத்ருஜித்தையும் அப்பெண் குறு முயல்களை அடிப்பது போல் அடித்தாள். இருவரும் மாண்டார்கள். சிலர் புறங்கொடுத்து ஓடினர்கள். தேவி சிங்கத்துடன் மறைந்தருளினள்.

மகனுடைய வீரச் செயலையும் தேவியின் திருவருளையும் நினைந்து இன்பக் கண்ணீர் வடித்தாள் மனேரமை.

மட்டற்ற மகிழ்ச்சியடைந்த சுபாகு நல்லநாளில் சசிகலைக்கும் சுதர்சனனுக்கும் திருமணஞ் செய்து வைத்தான். வெகுமதிகளாகப் பொன்னும் மணியும் ஆடைகளும் வழங்கினன். தாயும் மனைவியும்

# மகா பாரதம்

## சாந்தி பருவம்

.(264-ஆம் பக்கத் தொடர்ச்சி)

கழுகு அவர்களிடம் வந்து கூறலாயிற்று. ''மதியில்லாத மனிதர்களே! சொந்த அறிவைக் கொண்டு நடப்பவன் உத்தமன். குருவின் அறிவைக் கொண்டு நடப்பவன் மத்திமன். நண்பனின் அறிவைக் கொண்டு நடப்பவன் அதமன். நரியின் அறிவைக் கேட்டு நடக்கின்ற உங்களை நான் என்ன என்று கூறுவேன்? உயிர் போய் கட்டை போல் ஆன குழந்தையைக் கருதி ஏன் துயரப்படுகின்றீர்கள். நீங்களும் ஒரு நாள் சாகப் போகின்றீர்கள். துன்பத்தை விடுங்கள். தவத்தைச் செய்யுங்கள். செல்கதிக்கு உறுதி தேடுங்கள். சுகமும்துக்கமும் வினையால் விளைகின்றன. பிறந்தவர்கள் இறந்தே தீருவார்கள். ஆகாயத்தில் எறிந்த கல் நிலத்தில் விழுந்தே தீரும். மாண்டவருக்காக வருந்துவது பேதைமை. சந்தியா காலத்தில் சென்று நீராடி தர்ப்பணம் புரியுங்கள். பாவத்திலிருந்து விலகுங்கள். காலத்தைக் கொல்லாதீர்கள். அழுகையை விட்டுச் செல்லுங்கள். உயிர்களுக்கு மரணம் நித்திரை போல் ஆறுதலையை யளிக்கின்றது. சாப்பிட்ட இலையை யாராவது விரும்புவார்களா? அது போல் உயிர் போன உடம்பை விரும்பிப் பார்த்துக்கொண்டிருக்கலாமா? மரணம் கருவிலும் வரும்: இளமையிலும் வரும்; முதுமையிலும் வரும். காலத்தை வென்றவர் யார்? திரும்புங்கள்'' என்றது.

அவர்கள் அவ்வுரையைக் கேட்டு துயரம் ஆறித் திரும்பினார்கள். நரி வந்து தடுத்துக் கூறத் தொடங்கியது. மனிதர்களே! அற்ப புத்தி

---

உடன்வர சுதர்சனன் அயோத்திமா நகரம் புகுந்தான். சென்று லீலாவதியின் கால்மீது வீழ்ந்து வணங்கினான். அம்மா! தங்கள் புதல்வனும் தங்கள் தந்தையும் தேவியினால் கொல்லப்பட்டார்கள். எல்லாம் விதி செய்த வினை. என்னைத் தங்கள் மைந்தனாக நினைந்து ஆசிர்வதியுங்கள்'' என்று தழுதழுத்த குரலில் கூறினான்.

லீலாவதி முதலில் பெருங் கலக்கம் எய்தினாள். பின்னர் தெளிவு பெற்றாள். அவனை வாழ்த்தினாள். தந்தையாருடைய சிம்மாசனத்தில் அமர்ந்து சுதர்சனன் அரசு புரிந்தான். குடிகள் மகிழ்ந்தார்கள். தேவிக்குத் திருக்கோயில் புதுக்கினான். எங்குந் தேவியின் பக்தி நெறியைப் பரப்பினான்.

சசிகலை சகல நலன்களுடன் இனிது வாழ்ந்தாள்.

யுள்ள கழுகின் மொழிகளுக்கு முக்கியந்தரலாமா? ஆராய்ந்து எதையுஞ் செய்ய வேண்டும். கடந்த ஞானிகளும் கடப்பரோ மக்கள் மேல் காதல்? புத்திரபாசம் யாரையும் விடாதே? ஆ. இம் மகனுடைய முக மலரைக் கண்டால் எனக்குங் கண்ணீர் வருகின்றதே. முயற்சியுடையார் உயர்ச்சியடைவார்; அயர்ச்சியடையார். முயற்சி பயனைத்தரும். உங்கட்குக் கருணையில்லையா? தந்தையின் உடம்பிலிருந்து உண்டானவன் மைந்தன். இத்தகைய புத்திர மாணிக்கத்தைக் காட்டில் எறிந்து போகலாமா? இன்னும் சிறிது நேரம் இருந்து புதல்வனுடைய பால் ஒழுகும் முகத்தைப் பாருங்கள்'' என்றது.

நரியின் நல்லுரை கேட்ட சுற்றத்தார் மகளிடம் சென்றார்கள். கழுகு வந்து கவனிக்கலாயிற்று. ''மானிடர்களே! நான் பிறந்து ஆயிரம் ஆண்டுகள் ஆயின. இறந்தவன் ஒருவனுவது பிழைத்ததை நான் பார்க்கவில்லை. இங்கு தினந்தினம் ஆயிரம் ஆயிரம் பிணங்கள் வருகின்றன. உறவினர் பிணத்தை விட்டுப் போகின்றார்கள். மாண்டவன் மீண்டு எழமாட்டான். பயனில்லாத முயற்சி கூடாது. உங்களை இந்தப் பிணம் பார்க்கின்றதா? உங்கள் அழுகையை இது கேட்கின்றதா? உங்கள் மகன் வேறு உலகம் போய்விட்டான். அவன் அணிந்திருந்த சட்டை போன்றது இக்கட்டை. சட்டையை மகன் என்று கருதலாமா? இங்கிருந்தால் மேலும் மேலுந் துயரம் பெருகும். கொதிக்கின்ற பால் ஒரு ஏனத்திலிருந்து மற்றொரு ஏனத்துக்கு மாறுமானல் சூடு ஆறும். அதுபோல் இடம் மாறினல் துயரம் ஆறும். நிற்காதீர்கள். போங்கள்'' என்று கூறியது. இதைக்கேட்ட அவர்கள் துயரம் மாறித் திரும்பினார்கள்.

நரி மறுபடியும் அவர்களைத் தடுத்து நிறுத்திச் சொல்லலாயிற்று. ''அன்புள்ளவர்களே! தங்கம் போன்ற நிறமுள்ள இப்பாலகனைப் பாருங்கள். இவன் பிதிர்களுக்குப் பிண்டதானஞ் செய்வதற்கு உரியவன். இறந்தவர் எழுவது உண்டு. சாவித்திரியால் சத்தியவான் பிழைக்கவில்லையா? உங்கள் துன்பத்தைக் கண்டு சித்தனே முனிவனே தேவனே ஒருவன் வந்து இறந்த மகனைப் பிழைப்பிக்கலாம் ஆதலால் இருந்து முயற்சி செய்யுங்கள்'' என்றது. அவர்கள் அவ்வுரையைக் கேட்டுத் திரும்பினார்கள். கழுகு வந்து கூறத் தொடங்கியது.

''அறிவில்லாதவர்களே! மன்னவரும், மாமுனிவரும், பெருஞ் செல்வர்களும் முடிவில் காலன் வசப்பட்டு மாய்கின்றார்கள். இது மயானம். மயானத்தில் நெடுநேரம் இருந்தால் உங்கள் தவம் அழியும். தந்திரமுள்ள நரியின் சொல் பயன் அற்றது. சிவபெருமான் அல்லது குமாரக் கடவுளாவது வந்தால் இர்குழந்தை பிழைக்கும். அவர்கள் உங்கள் பொருட்டு வருவார்களா? கற்பகோடி காலந் தவஞ் செய்

தாலும் அவர்களைக் காண்பது அரிது. ஆதலால் வீண் பொழுது போக்க வேண்டாம். போய் வாருங்கள்'' என்றது.

சுற்றத்தார் வீட்டுக்குத் திரும்பினார்கள். நரி வந்து கூறத் தொடங்கியது. ''நன்றி கெட்டவர்களே! உங்களுக்கு சுய அறிவு இல்லையே! கழுகுக்கு என்ன தெரியும்? கழுகின் சொல் வேதவாக்கா? இன்பத்துக்குப் பின் துன்பமும், துன்பத்துக்குப்பின் இன்பமும் உண்டு. இந்தப் பாலகன் பிழைப்பான் என்று நான் உறுதியாக நினைக்கின்றேன், இவனை இந்தச் சுடலையில் விட்டுப்போவது உசித மன்று. ஆகவே போகாதீர்கள். பொறுமை பெருமை தரும். அவசர புத்தி கூடாது'' என்றது.

கழுகு வந்து கூறலுற்றது. ''ஏ மானிடர்களே! இது பேய்களும் பிசாசுகளும், யட்சர்களும் ராட்சதர்களும் வாழ்கின்ற இடம். அச்சத்தைத் தருவது. பிணத்தைப் போட்டுவிட்டுப் போய், இறந்தவனுக்கு எள்ளுந் தண்ணீரும் இறைத்து நீர்க்கடன்களைச் செய்யுங்கள். அது அவனுடைய ஆன்மாவுக்கு நலத்தைச் செய்யும். பருந்துகள் கொடுமையாக ஒலிக்கின்றனர். நரிகள் ஊளையிடுகின்றன, சிங்கங்கள் கர்ஜிக்கின்றன. பகலவன் மறைகின்றான். எங்கும் பிணப்புகை சூழ்ந்துள்ளது. ஓமப்புகை ஆயுளை வளர்க்கும்; ஈமப்புகை ஆயுளைத் தேய்க்கும். ஒரு சிறிதுந் தாமதிக்காமல் புறப்படுங்கள்'' என்றது.

புறப்படுகின்ற அவர்களை மறுபடியும் நரி தடுத்து நவில்கின்றது. ''நில்லுங்கள். உங்களுக்குப் பயம் வேண்டாம். அச்சம் மனிதனை அழிக்கும். சூரியன் மறைகின்ற வரை இப்பாலகனுடைய அழகு ஒழுகும் முகத்தைப் பாருங்கள். பிறகு பார்க்கக் கிடைக்காது. இது உருத்திரன் நடனம் புரியும் புனிதமான இடம். இங்கு ஜெபம் புரிந்தால் அதிக பலன் என்று பெரியோர்கள் கூறுவார்கள். காசிக்கு மகாமயானம் என்று ஒரு பேருண்டு. கழுகு கூறுவது பிழை. அதன் வார்த்தைக்கு மதிப்புக் கொடுக்காதீர்கள்'' என்றது. நரியின் மொழிகளாலும், கழுகின் மொழிகளாலும் உறவினர்கள் ஒரு நிலைமையை யடையாது, இப்படியும் அப்படியும் உழன்றார்கள். நரியும் கழுகும் தத்தம் நலன் கருதிப்பொருள் அடங்கிய சொற்களைக்கூறிஅவர்களைத் தினைக்கச் செய்தன. தன்னலமுள்ள அவைகளின் சொற்கள் அவர்களை மயங்கச் செய்தன.

அப்போது சிவபெருமான் தோன்றியருளினார். அவரை அவர்கள் அஞ்சலி செய்து துதித்தார்கள். சிவபெருமான் மாய்ந்த மகனை எழுப்பி நூறு வருடங்கள் வாழும்படி வரம் அளித்து,நரிக்கும் கழுகுக்கும் பசியை மாற்றி, மறைந்தருளினார். உறவினர் எழுந்த மகனுடன் மனம்மகிழ்ந்து திரும்பினார்கள். இப்படி ஒருவரலாறு முன் நிகழ்ந்தது மாண்டவர் தெய்வத் திருவருளால் பிழைக்கவும் கூடும் ''என்று'' பீஷ்மர் கூறினார். (தொடரும்)

திருப்புகழமிர்தம் ஆண்டுச் சந்தா

| | | | |
|---|---|---|---|
| இந்தியா | ... | ரூ. | 3-50 |
| இலங்கை | ... | ரூ. | 3-50 |
| மற்ற நாடுகள் | ... | ரூ. | 5-50 |

---

மலேசியா, சிங்கப்பூர் முதலிய நாடுகளிலுள்ள அன்பர்கள் ...த்து வரும் சௌமிய ஆண்டுச் சந்தா ரூ. 5—50, ரூபாய் ஐந்து பைசா ஐம்பது மட்டும் உடனே மணியார்டர் (Money order) மூலம் அனுப்பி வைக்க வேண்டுகின்றோம். பிரிட்டிஷ் போஸ்டல் ஆர்டர்களோ, வங்கி உண்டியல்களோ வாங்கியனுப்ப வேண்டாம் என்று கேட்டுக்கொள்கிறோம்.

வசதியுள்ள அன்பர்கள் மட்டும் பின்னர் குறிப்பிட்டுள்ள அன்பர்களுடன் தொடர்பு கொண்டு அவர்கள் மூலம் சந்தாத் தொகையை அனுப்பிவைக்கலாம்.


KOVILOOR ANDAVAR LIBRARY, KOVILOOR
A. No. 34331

1. திரு. K. K. மாணிக்க முதலியார் அவர்கள்.
   44, Gopeng Road, Penang.
2. திரு. G. குழந்தைவேலுத் தேவர் அவர்கள்.
   46, Jalan Chermai, Off Jalan Raja Muda,
   Kuala Lumpur.
3. திரு. A. S. நாகலிங்கம் அவர்கள்.
   25, Hoover Park, Hose Road, Teluk Anson.

Manager,
THIRUPPUGAL AMIRTHAM OFFICE,
89, Singanna Chetti St., Chintadripet, Madras-2.

---

புதிய ஜவுளி ! கரூர் விலை ! !

ஸ்ரீ ஜோதிலெக்ஷ்மி விலாஸ்

ஜவுளிக்கடை

தெற்கு வீதி :: சிதம்பரம்.

நயமான நல்ல சரக்கு; விலை சகாயம்; குறைந்த லாபத்தில் விற்பனையாகின்றது. உண்மையும் உழைப்பும் உடைய வியாபாரம், புதிய பார்டர்கள், உத்தரவாதமுள்ள சாயம், பலவூர் கலர் புடவைகளும், வேட்டிகளும் கிடைக்கும்.

ஒரே விலையில் விற்கும் நாணயமுள்ள கடை

ஒரு முறை பார்த்தவருக்கு உண்மை விளங்கும்.

உரிமையாளர் : D. வீரப்ப முதலியார்